# ஜாபாலோபநிடதம்

## முதற்கண்டம்.

எது குருக்ஷேத்திரத்திற்கு அடுத்தது? தேவர்கட்கு நற்கருமப் பயனாயுள்ளது? சர்வபூதங்கட்கும் பிரம்மசதன்மாயுள்ளது என்று பிருகஸ்பதி யாக்ஞவல்கியரை வினாவினர்.

அவிமுக்தமே (காசி) * குருஷேத்திரத்திற்கு அடுத்தது, தேவர்கட்கு நற்கருமப்பயனாயுள்ளது, எல்லாப்பூதங்கட்கும் பிரம்ம சதனமாயுள்ளது.

* இக்காசி போன்ற பல சிவஸ்தலங்கள் வேதோபநிடதங்களிற் குறிப் பிட்டிருப்பதைக் கவனிக்க.

(அந்த க்ஷேத்திர சிந்தனையால்) அந்த க்ஷேத்திரத்தை நீங்கி எங்குச் சென்றாலும், அவ்விடம் குருக்ஷேத்திரத்தினை யடுத்தது. தேவர்கட்கு நற்கருமப்பயனாயுள்ளது, சர்வபூதங்கட்கும் பிரம்மசதன மாயுள்ளது என்று (ஒருவன்) எண்ணுவான்.

இந்த க்ஷேத்திரத்தில் ஜந்துகட்குப் பிராணன் வெளிப்படுகையில் உருத்திரன் † தாரகப் ‡ பிரமோபதேசம் செய்வன், அதனால் அச்செந்துக்கள் அமுர்தமாய் மோட்சத்தையடையும்.

† உருத்திரன் - ருத் - சம்சாரத்தில் ஆன்மாக்களைக் கட்டும் வித்தை, அதனை எவன் பரிகரிப்பனோ அவனே ருத்திரன். ருத் - சப்தமயப் பிரபஞ்சம், அதனைத் தன்வசப்படுத்திக் கொண்டவன் ருத்திரன். ருச் - பிரமவித்தை, அதனையுபதேசிப்பவன். ருத் - சப்தமயப்பிரபஞ்சத்தை யொழிப்பவன் அதாவது மௌனசமாதியை உபதேசிப்பவன் ருத்ரன். ருத் - பிரமவித்தையினால் ஜீவ அவித்தையை நிவிர்த்திப்பவன் ருத்திரன். ருத்திரன் - சங்கார காலத்தில் சம்ஸ்த பிராணிகளையும் கதறச்செய்பவன். ருத்திரன் - பிரதிபந்தமாகிய ரோதிகா சத்தியைத் தொலைப்பவன். ருத்திரன் - விருத்திகளைத் தடுக்கும் தமோகுணத்தைத் தன் வசப்படுத்தினவன். ருத்திரன் - உலகத்திலுள்ள ஆன்மாக்களிடத்தமைந்த அஞ்ஞானத்தை நோக்கியிரங்குபவன், ருத்திரன் - ஆவரணத்தை நிவிர்த்திபவன், ருத்திரன் - சர்வஜன பயங்கரன்.

‡ தாரகமென்பது பிரணவமே யெனவும், அப்பிரணவம் பரசிவமே யெனவும் வேதோபநிடதபலிஷ்ட பிரமாணங்களால், தொகுதி 4 பக்கம் 47ல் வெள்ளிடை மலைபோல் விளக்கினாம். ஆண்டுக்காண்க.

ஆகலின் அவிமுக்தத்தையே தரிசிக்கவேண்டும், அவிமுக்தத்தை நீங்குதல் கூடாது, இஃதிங்ஙனம் (அறிக) என்றனர் யாக்ஞவல்கியர்.

## இரண்டாம் கண்டம்.

இறுதியில்லா தவனும், மனோவாக்குகளுக் கெட்டாத இவ்வாத் துமாவெவன்? அவனை யெங்ஙன நானறிவேன் என அத்திரி முனிவர் யாக்ஞவல்கியரை வினவினர்,

அவன் அவிமுக்தத்தில் உபாசிக்கப்படுபவன், அவன் அவிமுக் த்தில் காணப்படுபவன் என யாக்ஞவல்கியர் கூறினர்.

அவிமுக்த மெங்குளது? வரணையிலு நாசியிலும் இடையே யுள்ளது. எதுவரணை? எதுநாசி? இந்திரியங்களிலுண்டாகும் (இம்மையைக்கெடுக்கும்) தோஷம் களியாவற்றையும் நாசஞ்செய்விப்பதால் 'வரணை', எனவும், இந்திரி யங்களாற் செய்யப்பட்ட (மறுமையைக் கெடுக்கும்) பாவங்களியாவற்றையு நாசஞ்செய்விப்பதால் ‘நாசி' எனப்படும்.

இதற்கிடம்யாது? புருவங்கட்கும் நாசிக்கும் எங்குசந்தியுண்டா கிறதோ அதுவே சுவர்க்க லோகத்திற்கும் மற்றைய லோகங்கட்கும் சந்தியாம்.

இந்தச் சக்தியையே சக்தியெனக் கொண்டு பிரமநிஷ்டர்கள் உபாசிக்கின்றனர். அவிமுக்தத்திலே உபாசிக்கத்தக்கவன் அவிமுக்தன். அவன் (உருத்திரன்) அவிமுக்தஞானத்தை யுபதேசிப்பான்.

## மூன்றாங்கண்டம்.

எதனைச் செபித்ததனால் அமுர்த தன்மையைப் பெறுவான். அதனை யுபதேசித்தருளுக வென யாக்ஞவல்கியரை கண்டு, பிரமசாரிகள் வினவினர். சதருத்தரியத்தாலென்றார் அந்த யாக்ஞவல்கியர்.

இவைகளன்றோ அமுர்தனுக்கு (உருத்திரனுக்கு) நாமதேயங்கள், இவைகளாலன்றோ அமுர்தனாவான்.

## நான்காங்கண்டம்.

பினர், விதேக குலத்தில் பிறந்த ஜனகமகாராஜன் யாக்ஞவல்கி யரை வழிபட்டு ஓ பகவ! சந்நியாசவிதியை உபதேசித்தருள்வா யென்றனர்.

பிரமசரியத்தைப் பூர்த்திசெய்து கிரகஸ்தனாக வேண்டும், கிருகஸ்தாசிரமத்திலிருந்து வானப்பிரஸ்தமடைய வேண்டும், வானப்பிர

ஸ்தாசிரமத்திலிருந்து சந்தியாசமடைதல் வேண்டும், அங்ஙனமின்றி, பிரமசரியத்திலிருந்து சந்கியாசமடையலாம், கிருகஸ்தாசிரமத்திலிருந்தும் சந்நியாச மடையலாம் வானப்பிரஸ்தாசிரமத்திலிருந்தும் சந்நியாசமடையலாம், விரதமுள்ளவனாயினும் விரதமில்லவனாயினும் சமாவர்த்தம் பெய்தவனாயினும் இஃதில்லாதவனாயினும், அக்கினி யுடையவனாயினும் இல்லாதவனாயினும் எக்கணத்தில் வைராக்கிய முண்டாகிறதோ அக்கணமே சந்நியாசம் பெறவேண்டுமென உபத்தேசித்தருளினர் யாக்ஞுவல்கியர்.

ஆக்நேய மெய்கிற இஷ்டியை யியற்றவேண்டும், அக்னிபிரா ணரூபனாதலால் அவ்விஷ்டியை யியற்றினால் பிரானேஷ்டியை யியற்றியவனாவன், பிரஜாபத்திய இஷ்டியையியற்றிடுதல் கூடாது.

பினர், தீமை தாவீயேஷ்டியை யிற்றவேண்டும்... இதனால் சத்துவம் ரஜசு என்ற முத்தாதுக்களும் (சமனாகும்), 'அயந்தே' மந்திரத்தொடக்கத்தால் அக்கியை முகர்ந்து பார்க்க வேண்டும், அக்னிக்குப் பிராணனே யோனியாதலால் பிராணனை யடைவாயென அக்னியை யோமஞ் செய்தல் வேண்டும்.

கிராமத்தி லிருந்து அக்னியைக் கொணர்ந்து முன்னர் நிருபித் தவண்ணம் முகர்ந்தும் பார்க்கலாம்.

அக்னி யகப்படாத வரையில் ஜலத்தி லோமம் செய்ய வேண்டும், ஜலம் சகல தேவர்களின் சொரூபம், சகலதேவர்கட்கும் ஸ்வாஹா காரத்தால் அதிலோமஞ்செய்து அதனைச் சிறிது எடுத்துட்கொளல் வேண்டும்.

நெய்யுடன் கூடிய அவிசே சுகந்தருவது, மோட்சமந்திரங்களால் வேதங்களால் அடையும் பிரயோசன மடைவன். அதுவே பிரமம், அதனையே யுபாசிக்க. என்றனர் யாக்ஞுவல்கியர்.

## ஐந்தாங்கண்டம்.

ஓ யாக்ஞுவல்கிய! யக்ஞோபவீத மில்லாதவன் பிராமணன் என்றனர் அத்திரி (எனவே உபவீதமில்லாதவன் எங்ஙனம் அக்னி காரியங்களை நடத்த கூடும்.)

இதுவே (ஞானமே) யஞ்ஞோபவீதம் அது ஆத்மா. நீரைக் குடித்தல் ஆசமனஞ் செய்தல் பரிவிராஜகருக்கு (சந்நியாசிக்கு) உள்ளது. வீரசுவர்க்கத்தை விரும்பித் தருமயுத்த மியற்றுபவருக்கும், அநசன (உபவாச) விரதத்திலும், ஜலப்பிரவேசத்திலும், அக்னி பிரவேசத்திலும் மகாபிரஸ்தானத்திலும் (மீளாயாத்திரை) ஆம்.

சந்நியாசி வேறு நிறம் காவிவஸ்திரமுண்டு முண்டிதனாய் சகலி பற்றற்றவனாய் பிச்சையேற் றுண்டு ப்ரம்மீ பாவம் பெறுவன். ஆதுரனாயிருந்து

சந்நியாசஞ் செய்து கொண்டால் மனத்தாலாவது வாக்காலாவது சந்நியாசம் செய்துகொள்ள வேண்டும், இவ்வழி பிரமதேவனா லறிந்து இவ்வழியே பிரமவித்தாகிய சந்நியாசி செய்வன். என்றார் யாக்ஞவல்கியர்.

## ஆறாங்கண்டம்.

அவர்களில் பரமஹம்சர் ஆவார் சம்வர் தகர், ஆருணி, சுவேத் கேது, துர்வாசர், ருபு, நிதாகர், ஜடபரதர், தத்தாத்ரேயர், ரைவர்கர், முதலியோர், இவர்கள் தெளிவான பரமஹம்ச சின்னந் தரித்தவர், தெளிவான பரமஹம்ஸாசார முள்ளவர், மயக்க முடையார் போலச் சரிப்பவர்...

திருதண்டம் கமண்டலம் சிக்யம் (உரி) யக்ஞோபவிதம் முதலியனவும், பூஸ்வாஹா முதலிய மந்திரங்களால் நீரிட்டு எக்காலமும் ஆத்ம சொரூபத்தைத் தியானிக்கவேண்டும்.

நிருவாணியாய் துவந்து வமில்லானாய் பரிக்ரக சூனியனாய் தத் துவ பிரமமார்க்கத்தில் நிஷ்டையுள்ளவனாய், மனசுத்தி யுள்ளவனாய் பிராண தட்சணார்த்தம் தக்ககாலங்களில் உதர (வயிறு) பாத்திரத்தில் பிட்சையெடுத்துப் புசிப்பவனாய், அவிமுக்தனாய் லாபாலாபங்களைக் கருதாமல் சமனாய், பாழ் வீடு அக்னிவளர்க்குமிடம், ஆற்று மனற் குன்று மலைக்குகை பொந்து, மரச்சந்து மலையருவி இவற்றில் பூமியிலே நியமமில்லாது வசிப்பவனாய், முயற்சியற்றவனாய் மமதை நீங்க சுக்லத் தியானம் செய்பவனாய் பிரமநிஷ்டனாய் நன்மை தீமை யொழிந்து சந்நியாசத்தால் தேகம் விடுபவன் பரமஹம்ஸனாம்.

மணவழகு.

சித்தாந்தம் - 1915 ஹு - ஆகஸ்டு மீ